# குறளோவியம்

மு. கருணாநிதி

1956

# எங்கள் எண்ணம்

திருக்குறள்: தமிழர்தம் தலையாய பெரு நூல்! அதன் ஒன்றேமுக்கால் வரிப் பாடல்கள் ஒவ்வொன்றும் அரிய பெரிய சிறந்த பரந்த சிந்தனையைத் தூண்டும் எழிலோவியங்கள்!

வள்ளுவரின் அருமைமிகு சொற்கள், ஆழ்ந்த பொருள்கள் ஆகியவற்றைக் **கலைஞர் மு. கருணாநிதி** அவர்கள் தமது அழகு தமிழில் எளிய நடையில் எல்லார் உள்ளத்தையும் ஈர்க்கும் நெறியில் வருணனை எழுத்தால் வண்ண ஓவியமாக அவ்வப்போது தீட்டி வந்த தன் தொகுப்பே இக் **குறளோவியம்**!

கலைஞர் கண்கொண்டு குறளைக் காண்பது தமிழைத் துய்ப்பார்க்கே இணையிலா இன்பமும், பெரும் பயனும் நல்கும். ஆதலால் இதனை நூல் வடிவில் தமிழ்ப் பெருமக்கள் முன் படைக்கிறோம்.

அக் குறளோவியத்தை எங்கள் வழி வெளியிட உரிமையளித்த கலைஞர் மு. கருணாநிதி அவர்கட்கு எங்கள் உளங்கனிந்த நன்றி !

தங்களன்புள்ள
திராவிடன் பதிப்பகத்தார்.

# மாலைக்குத் தூது!

மாலை நேரத்திலே-சோலை ஓரத்திலே-வேலை நிகர்த்த விழியினர் காதல் பயில்வர். அதுபோது ஆலையிட்ட கரும்பென அவதிபட்டு உழல்வர் ஆளன் அருகிலா மாதர். அந்திவானத்தின் அழகு காண்பர்-அதனோடு தன் இதழை ஒப்பிடும் அழகன் அங்கு வரவில்லையே என அயர்வர். தென்றல் அவர்தம் ஆடை நகர்த்தும். அதற்கு வாழ்த்துக் கூறித்தம்மைக் கேலி செய்யும் இன்பலோக ஏந்தல் இன்னும் வரக்காணோமே என விம்முவர். பூங்கொம்பு மலரிதழைத் திறப்பதற்கு முன்பே தேன் வண்டு பறந்து வரும் தன்மை காண்பர். "வண்டு தழுவும் மலர்பார் கற்கண்டே!" என இன்பம் மொண்டு தரும் எந்தன் துரையை இன்னும் காணோமே என ஏங்கு வர். மனம் வீங்குவர். மாலைப்பொழுது, அவர்தம் நெஞ்சில் படைகொண்டு தாக்குவது போல் தோன்றும்-இன்பம் தரவல்ல காதலையே நோயென்று கூறுவர். அந்த மனோ நிலையைத்தான் வள்ளுவர் அழகாகக் கூறுகிறார்.

காலைப்பொழுதிலே அரும்பாய்த் தோன்றி, பகலெல்லாம் பேரரும்பாகத் தழைத்து, மாலையில் மலராக மாறுகிறது இந்தக் காமநோய். அதற்கு இதோ குறள்:

"காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும் இந் நோய்."

அந்நோய் மலருகிற மாலை நேரம் எப்படி இருக்கிறது தெரியுமா மங்கைக்கு? அவளைக் கொல்ல வருகிற சேனையானது நெருப்புப்போல உள்ள மாலை நேரத்திற்கு தூதாக வருகிறதாம்.

"கொல்லும்படை, அழல் போலும் மாலைக்குத் தூதாகி" என்கிறார்.

அதுமட்டுமா?

மாலை நேரத்திலே ஆயன் குழலூதிக் கொண்டிருக்கிறான். குழலிலேயிருந்து இனிமை அருவியெனக் கொட்டுகிறது. தென்றலுக்கே இன்பம் சேர்க்கிறது அந்த இசை. அசைந்தாடும் மலர்க்கொத்துகள் குழலிசைக்கு அபிநயம் காட்டுவதுபோல் காட்சி தருகின்றன. நாகத்தையும் மயங்க வைக்கும் என்பர் குழலோசை. அதுவும் ஆயர் பாடி இளைஞன் அந்த வாத்தியத்திலே திறமைசாலி. அந்தக் குழலோசையைப் பற்றி "காதலனைக்காணா கட்டழகி என்ன கூறுகிறாள் தெரியுமா? "என்னை வருத்தும் சேனை; மாலைக்குத் தூதாக மட்டுமல்ல-ஆயன் குழலாகவும் வருகிறது போலும்!" என்று புலம்புகிறாள்.

> " அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
> குழல்போலும் கொல்லும் படை "

# மதியும் மடந்தையும்!

வெள்ளிப் பாற்குடத்தின் வாய்போன்ற வட்ட நிலா. அல்லிக்குளமோ என ஐயுறும் வண்ணம் நட்சத்திர வானம். அவைகளைப்பற்றியெல்லாம் தேனிசை மீட்டி விட்டு, உலகத்தையே மறந்து அசைவற்று இருக்கின்றன அந்த நல்யாழ்கள் இரண்டும்—அந்த உயிர் யாழ்களின் கனவுலகத்தைக் கலைத்துவிடக் கூடாதேயென்ற பயத் தோடு, மென்காற்று—அவர்களை கீழ்ஸ்தாயியில் தாலாட்டு கிறது.

வானத்திலே உள்ள—விண்மீன்களோ, பெரியதோர் குழப்பமான ஆராய்ச்சியில் இறங்கி, கலங்கித் திரிகின் றன. என்ன அந்த ஆராய்ச்சி!

தாங்கள் எங்கேயிருக்கிறோம்—நிலவு எங்கேயிருக் கிறது என்பது தான் அவைகளின் ஆராய்ச்சியாகும்.

வானத்திலே உள்ள கண்ணாடியில்தான் இவள் முகம் தெரிகிறதோ—அல்லது, பூமியில் உள்ள கண்ணாடி யில் தான் நிலவு தெரிகிறதோ—என வியக்கும் அளவுக்கு நிலா முகம் படைத்த பேரழகி அவள்-ஆகவேதான்— அவளுக்கும், நிலவுக்கும் வேறுபாடு தெரியாமல் விண்மீன்கள் கலங்கித் திரிகின்றன." அதற்கு இதோ குறள்:—

"மதியும் மடந்தை முகனும் அறியா
பதியிற் கலங்கிய மீன்"

இப்படி விண்மீன்களுக்கே கலக்கத்தை உண்டு பண்ணிய அந்தக் கட்டழகியின் தோளிலே ஒருவன்

மெய்மறந்து சாய்ந்து கிடக்கிறான் என்பதைக் காணும் போது, இளம் உள்ளங்களில் பொறாமைக்கீறல் விழத்தான் செய்யும்-ஆனால் வள்ளுவர் உள்ளமோ, அறிவு மணக்கும் அழகான கேள்வியொன்றை எழுப்புகிறது— "அந்த உலகம்" என்று எந்த உலகத்தைப் பற்றியோ பிதற்றித் திரியும் சூதர்களுக்கு பதிலாக அமைகிறது அந்தக் கேள்வி.

"தான் விரும்பும் காதலியின் மெல்லிய தோளில் சாய்ந்திருந்து துயிலும் துயில்போல இனிமை வாய்ந்ததா அந்த தாமரைக்கண்ணான் உலகம்?"

இல்லை—இல்லை !—

இதோ குறளோவியம் காணுங்கள் :—

" தாம் வீழ்வார் மென்றோள் துயிலின் இனிது கொல்
தாமரைக் கண்ணான் உலகு ?"

# காதலன் தந்த அடையாளம்!

காதலர் பிரிந்து விட்டால் காதலியின் மேனியிலே பசலை நிறம் பாய்கிறதாம். பசப்புறு பருவரல் என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் அந்தப் பசலை நிறத்திற்கு அடிமையான பாவையரின் வேதனைகளை மிக அருமையாக சித்தரித்திருக்கிறார்.

மஞ்சத்திலே கொஞ்சு மொழிகள் உதிரும்-ஆடல் பாடல் - ஊடல் - கூடல் - எல்லாமே ஒன்றையொன்று போட்டியிடும். காலையிலே எழுந்திருந்து கண்ணாடி பார்க்கும் தலைவி, கண்ணாடியிலிருப்பதும் தன் உருவம் தான் என்பதை மறந்துவிட்டு. திடீரென்று, தன் கன்னத்தை மூடிக் கொள்வாள். பிறகு தான் அவளுக்கு நினைவு வரும்; எதிரே யிருப்பது கண்ணாடி–அதிலே தெரிவது தன் உருவம் என்று! யாரும் தன் கன்னத்தைப் பார்த்து விடவில்லை யென்றே திருப்தி ஏற்படும் அவளுக்கு- ஒவ்வொருநாளும் காலையிலே இப்படி ஒரு நிகழ்ச்சியை சமாளித்துத் தீரவேண்டி யிருக்கிறது என்று தெரிந்தும் கூட, இரவு நேரத்திலே அவள் அதைப் பற்றிக் கவலைப் பட்டுக் கொள்வதுமில்லை, முன்ஜாக்கிரதையாக இருப்பது மில்லை, அதனால், கன்னத்திலே பசலை நிறம்பாய்ந்த ஒரு வட்டம் உதயமாகி விடுகிறது. யாராவது பார்த்து விடுவார்களே என்ற வெட்கம் இருந்தாலும்கூட, அந்தக் கன்னத்தை அவள் தனக்குள்ளாக ரசிக்கத் தவறுவதில்லை. மெல்லிய விரல்களால் தடவிப் பார்த்து-ஏதோ ஒரு நடந்துபோன நிகழ்ச்சியை எண்ணி அவளாகவே சிரித்துக் கொள்கிறாள். யாராவது வந்தால், கன்னத்

தைத் தடவுவதுபோல மறைத்துக்கொள்கிருள். வந்தவர் போனதும், கண்ணுடியில் கன்னத்தைக் கண்டு களிப் படைகிருள். காதலன் பொறித்த முத்திரை அவள் கண்ணுக்கு விருந்தூட்டி, கருத்துக்கும் இனிமை சேர்க் கிறது.

இவளைப் போலவே ஒரு எழிலரசியைப்பேச வைக்கிருர் திருக்குறளார். காதலன் பிரிந்து விட்டான் காதலியிடம் விடை பெற்று! நிலவு போனதும் வானத் திற்கு இருள் நிறம் வருகிறதே அதுபோலவே இந்த நேரிழையாளுக்கும் பசலை நிறம் மேனியில் பரவி விடுகிறதாம். அந்தப்பசலை நிறம் தன் உடலில் ஏறிப் பரவுவதை அவள் காண்கிருள். காதலரின் பிரிவால் அல்லவா இந்நிறம் ஏற்பட்டது என வருந்துகிருள். அதேசமயம் அந்த வேதனையிலும் அவளுக்கோர் பெருமிதம் ஏற்படுகிறது.

கன்னதில் அடையாளம் பெற்ற காரிகை, வெட்கத் தால் வேதனையுற்ருலும், அது தன் காதலன் தந்த அடையாளம் என எண்ணி மகிழ்கிருளே; அதுபோலவே இவளும் பிரிவுத்துயரால் என் உடலில் பரவும் இந்த நிறம், என் காதலரால் ஏற்பட்டது என எண்ணுவது பெருமைகுரியது என்கிருள். அந்தக் குறள் இது :—

" அவர் தந்தார் என்னும் தகையால் இவர் தந்து
என்மேனிமேல் ஊரும் பசப்பு,'

# நோயும் நாணமும்!

"நகை தந்தார்—நகை தந்தேன். தொட்டார்—சுட்டேன். தழுவினார்—நழுவினேன். தொடர்ந்தார்—படர்ந்தேன். பிரிந்தார்—இருக்கிறேன்."

வேதனையை விழிமூலம் விளக்கி நிற்கிறாள் அவள். இன்னொருத்தியோ இடுப்பொடியாமல் இருப்பதற்காகத் தோழியின் தோளைப் பிடித்துக்கொண்டிருக்கிறாள். உயிரைக் காவடித் தண்டாகக் கொண்டு காம நோயும், நாணமும் இரு பக்கமும் தொங்குகின்றன; நான் என் செய்வேன்?—என்று துவளுகிறாள் அந்தத் தோகை.

> காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
> நோனா உடம்பி னகத்து.

அவள் குமுறலை உணர்த்துகிறது இந்தக் குறள். இருவர் நிலைதான் இதுவென்றால், எந்தன் நிலையோ அதைவிட மோசம் – என்று மழைக் கண்களைக் காட்டுகிறாள் மற்றொருத்தி.

காதலன் விடைபெற்றபோது அவள் கூறிய வார்த்தை என்ன தெரியுமா? "நீ போகவில்லையென்றால் என்னிடம் சொல்! போய்த் திரும்புகிறேன் என்று சொல்வதானால், நீ திரும்பும் வரையில் உயிரோடு இருப்பவரிடம் விடைபெற்றுப் போ!"

இப்படிச் சொல்லிக் காதலனைத் திண்ற அடித்தவள் அவள். பாவம்; அவளால் காம நோயைப் பிறர் அறியாமல் மறைக்கவும் முடியவில்லை; அந்த நோய் தந்த

காதலனிடம், நோயின் கடுமை பற்றி விவரிக்கவும் வெட்கமாயிருக்கிறது. இப்படித் திண்டாடுகிருள், அந்த வண்டாடும் மலர்க் குழலாள்.

"கரத்தலும் ஆற்றேன் இந்நோயை நோய்செய்தார்க்கு
உரைத்தலும் நாணுத் தரும்.

உடலிற் பூசிய சந்தனத்தின் ஈரம் காய்வதற்குள் அவசரப்பட்டார்; பாடச்சொன்னர்; உடனே இதழ் மூடச்சொன்னர்; "இசை கசக்கிறதோ?" என்றேன் "இல்லை; இதழ் இனிக்கிறது" என்ருர். விளக்கைக் காட்டி, "அணையுங்கள்" என்றேன். அணைத்தார். உயிர், அணு ஒவ்வொன்றையும் தேனில் நனைத்தார். பக்கத்தே சிறிது நகர்ந்தேன். உடனே என் உடலெங்கும் பசலை நிறம் பரவிவிட்டது. அந்தப் பிரிவைக்கூட என்னுல் தாங்க முடியவில்லையே; இந்தப் பிரிவை எப்படியடி தாங்குவேன்? என்று வருந்துகிருள், அந்த வண்ண மணிச் சிலையாள்.

"புல்லிக்கிடந்தேன்; புடைபெயர்ந்தேன்; அவ்வளவில்
அள்ளிக்கோள் வற்றே பசப்பு."

முக்கனியோ, முழுமதி மூன்றே—என ஐயுறும் வகையில் அமைந்த அந்தப் பெண்ணரசிகள், கண் ணயரா நிலையில் காதலனுக்காகக் காத்திருக்கும் காட்சி யைத்தான் வள்ளுவர், குறளோவியமாகத் தீட்டித் தந் திருக்கிருர், குறையாத அழகோடு—குன்ருத ஒளியோடு!

# யாருள்ளி?

யாராவது நம்மை நினைக்கும்போது தும்மல் வருமென்றும், அப்படித் தும்மிடும்போது வாழ்த்து சொல்வது என்றும் ஒரு நம்பிக்கை பழங்காலந்தொட்டு தமிழகத்தில் பரவி நிற்கிறது. அந்தப் பழக்கத்தை வைத்து வள்ளுவனுர் ஒரு அரிய காதல் காட்சியை சித்தரிக்கிருர்.

சோலைப் பசும் புற்றரையிலே—பால் வண்ண உடை உடுத்தி—காதல் மகனும், காதல் மகளும் இன்ப யாழை மீட்டிக்கொண்டிருக்கிருர்கள். ஆரத்தழுவி அகமகிழும் போது முகத்தில் பதிந்த முழு நிலவுப் பெண்ணின் கரிய கூந்தலின் சிறு தொகுப்பு, அவனையுமறியாமல் அவன் மூக்கிலே பட்டதாலோ என்னவோ தும்மிவிட்டான். உடனே அந்த அணங்கு, அவனை "வாழ்க!" என்று வாழ்த்தினுள். வாழ்த்தியவளுக்கு திடீரென ஒரு நினைவு எழுந்தது.

"ஆமாம்—எந்தப் பெண்மயில் உம்மை நினைத்தாள்? அதனுல் தும்மினீர்?" என்று ஒரு கேள்வியைப் போட்டு ஊடல் புரிந்தாள். செல்லமாக அழுதாள். காதலனுக்கு மீண்டும் தும்மல் வந்தது. காதலி, ஐயத்தால் அழுவாளே என்று அந்த முறை தும்மலை அவன் அடக்கிக்கொண்டான். அவளோ, காதலனை நினைத்து ஏங்குகிற இன்னொருத்தி இருக்கிருள் என்பதை நிச்சயமாக முடிவு செய்து கொண்டவள் போல,

"ஓகோ! இன்னொருத்தி உம்மை நினைப்பதை, எனக்கு காட்டிக்கொள்ளாமல், தும்மலை அடக்கி மறைக்கிறீரோ?" என்று மீண்டும் அழுதாள். அதை விளக்கும் குறளோவியங்கள் இரண்டு—இதோ!

"வழுத்தினு டேம்மினே ளுக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரேன்று."

"தும்முச் சேறுப்ப வழுதா ளு மருள்ள
லேம்மை மறைத்திரோ வேன்று."

# தோற்ருய்! தோற்ருய்!

தும்மினுல் அருகிருப்போர் வாழ்த்துவர். இது பழையகால வழக்கம். அந்த வழக்கத்தை வைத்து வள்ளுவர், காதலர்களை ஊடல் புரியமட்டும் விடவில்லை, ஊடல் தீர்ப்பதற்கும் அந்தப் பழக்கத்தைப் பயன் படுத்துகிருர்.

துப்புரச் சிவந்த வாயாள் தூய பஞ்சணையின் மீது ஒப்புறக் கணவனுடன் இருந்த காலை இடையே எழுந்தது ஊடல் என்னும் காதல் திருவிளையாடல்! ஒன்பது முத்தம் தருவேன் என்று எட்டு தந்து நிறுத்திஞனே; அல்லது அவள்தான் எட்டி நின்றுவிட்டாளோ?— கட்டிக் கரும்பே என அழைத்துவிட்டு, சுவைக்காமல் தயங்குகிருனே என்று ஊடல் புரிந்தாளோ? எண்ணி ஏன் ஒன்பது கேட்டாள்; எண்ணுமல் பெறுவதற்கு ஏன் அஞ்சினுள் என்று அவன்தான் மடிவிட்டு எழுந் தானே? எப்படியோ உல்லாசபுரியில் ஊடல் நிலவு உதயமாகிவிட்டது. சில விஞடிகள் அமைதி!

காதலன் திடீரெனத் தும்மிவிட்டான். காதலியும், ஊடலை மறந்து "வாழ்க!" என்று வாழ்த்திவிட்டாள்.

"தோற்ருய்! தோற்ருய்!" என்று தோகையின் சிவந்த கன்னத்தைச் சிவக்கவைத்தான். அவளும் பின்னிக் கொண்டாள். 'தும்மல்' அவர்கள் ஊடலைத் தவிர்த்து விட்டது.

காதலன் சாதாரணமாகக்கூட தும்மி யிருக்கலாம். ஆனால் அவளோ, மறுநாள் காலை தன் தோழியிடம், தன் காதலனின் திறமைக்கு ஓர் ஒடுத்துக்காட்டாக,

"நான் ஊடினேன்—அவர் வேண்டுமென்று தும்மினார். நான் ஊடலை மறந்து வாழ்த்திவிட்டேனடி!" என்று கன்னத்தை தடவிக்கொண்டே கனிமொழி சிந்துகிறாள். அந்தக் குறள் இதோ!

"ஊடியிருந்தே மாத் தும்மினார் யாந்தம்மை
நீடு வாழ் கென் பாக் கறிந்து,"

# நலிவுதரும் நனவு!

அவளோர் சித்திரப்பாவை. உரித்தெடுத்த அல்லித் தண்டின் நிறம் பெற்ற உருக்குலையா மங்கை. அவள் ஒளி முகம் ஓராயிரம் நிலவுகளை ஒன்றாக அடுக்கிவைத்துக் கற்பனை செய்து போட்டிபோட்டுப் பார்த்தாலும் எதிர் நிற்கக்கூடிய ஆற்றல் வாய்ந்தது. அத்தகைய—அழகின் வடித்தெடுத்த கூட்டு அவள்! காணக் கிடைக்காத தங்கம். தேடக் கிடைக்காத வைரம். களிப்பிலாடும் மயில்—காதாரப் பண்பாடும் குயில்! நடக்கும் பொன் வண்டு! நடனமிடும் நட்சத்திரம்!

அவள் அன்னத்தூவி பரப்பிய மஞ்சத்திலே ஆனந்த நித்திரை செய்துகொண்டிருக்கிறாள். தூங்கும் அந்தத் தோகையாளின் துடியிடை நெளிவதேன்? தூய்மை நிறை அவள் செவ்விதழ்களிலே அமுதம் நிறைவதேன்? மின்னித் தேங்கும் அந்த அமுதத்தை அவளது அரும்பு இதழ்கள் அவளையுமறியாமல் சுவை பார்ப்பதேன்? ஆகா—ரத்தினத்தின் நிறம் பழிக்கும் விதத்திலே அவள் கன்னங்கள் மாறுகின்றனவே; அது ஏன்? எத்தகைய மந்தகாசமான புன்னகை! முல்லைச் சிரிப்பா? முழு நிலாத் தோற்றமா? எல்லையிலா மகிழ்ச்சியின் கோடுகள் அவள் வதனமெங்கும் அழகுக் கோலங்கள் போடு கின்றனவே!

இதற்குக் காரணம் யாரைக் கேட்பது? வள்ளு வரைத்தான் கேட்கவேண்டும்.

"அய்யா வள்ளுவப் பெருந்தகையீர்! என்ன காரணம் இதற்கு?"

"தம்பி! அவளே—அதோ எழுந்துவிட்டாள்—அவளையே கேள்!"

இப்போது அவள் தனக்குத்தானே பேசிக்கொள்கிருள். அது நம் காதில் விழுகிறது—கேளுங்கள்!

"கனவிலே வந்து என்னை என் காதலர் கூடினுர். இன்ப சுகந்தரும் அன்பு பொருந்தி ஆனந்தம் பெற்றேன் என்னை விட்டு நீங்காமல் கனவிலே கூடியிருந்த என் காதல் தேவனை, நனவு என்று சொல்லப்படுகிற ஒரு கொடியவன் ஓடிவந்து பிரித்துவிட்டானே!"

காரிகை கதறுகிருள். நனவைத் திட்டுகிருள்.

காதலனேடிருப்பதாக கனவு கண்டாளாம். விழித்துக் கொண்டாளாம். அதற்காக வருந்துகிருள். அந்த சோகத்தை வள்ளுவர் நடையிலே கேட்டு இன்பம் பெறுங்கள்—இதோ!

"நனவேன ஒன்றில்லையாயின் கனவினுற்
காதலர் நீங்கலர் மன்"

# சயனத்துச் சாயல்!

வெள்ளிமணல் படுக்கையிலே அந்தப் புள்ளிமயில் படுத்திருந்தாள். அந்த சயனத்துச் சாயலை தூர இருந்து காண்கிறான் அவன். அந்த அழகுமிகும் காட்சியால் உள்ளத்தில் வெல்லப்பாகு தடவிட அவன் கண்களை வாழ்த்துகிறான். பாராட்டுகிறான்.

குளிர் மொண்டுவரும் தென்றலிலே கதகதப்பு உணர்ச்சி கலந்து வருவதாக அறிகிறான். சிறிது நேரம் சிலையானான். உணர்வு வந்து அசைந்தான் அப்போது அந்த நிலாப் பதுமைக் காணவில்லை. அவள் போய் விட்டாள்.

அவன் நெஞ்சு துடித்துக் கனத்துவிட்டது. ஐயோ! ஏன் இந்த அழகியைப் பார்த்தோம், பார்க்காமலிருந் திருந்தால் இப்படிப் பதைக்கவேண்டிய அவசியமே வந்திருக்காதே என்று புலம்பினான்.

வேதனையை உண்டாக்கிய தன் கண்களை வசை பொழிந்து கண்டித்தான். வீடு சென்றான். தூக்கம் வரவில்லை. அவளை நினைத்து நினைத்து அழுதான். அப்போது அவனுக்கு ஒரு ஆறுதல் ஏற்பட்டது.

"சும்மா இருந்த என்னை சுந்தரியின் நினைவால் வாடச் செய்யும் நோயை உண்டாக்கிய ஏ! கண்களே— நீங்கள் தூக்கம் வராமல் அழுகிறீர்களே...அது எனக்கு மிக மகிழ்ச்சி! முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் தண்டனையை நன்றாக அனுபவியுங்கள்!" என்று முணு முணுத்தான். அந்த முணுமுணுப்பை முத்தமிழ் வள்ளல் குறளார் எப்படி இரு வரிகளில் அமைத்திருக்கிறார் படியுங்கள்!

"ஓ ஓ வினிதே யெமக்கிந் நோய் செய்தகண்
டா அ மிதற்பட்டது"

# பழி மறக்கும் பான்மை!

கணவன் தன்மனைவிக்கு தவறிழைத்து விடுகிறான். பெரியதவறு எதுவாயிருக்கும்—நாளைக்கு வந்து விடுகிறேன் என்று கூறிவிட்டுப் போனவன் சொன்னபடி வந்திருக்கமாட்டான். கொடுத்த முத்தம் காய்வதற்குள் அடுத்த முத்தம் அளித்திருக்க மாட்டான். நிலவின் அழகில் ஈடுபட்டிருந்திருப்பான், என்னைவிட நிலவு அழகோ என அங்கிருக்கும் ஆரணங்கு கேட்டிருப்பாள்-"ஆமாம்-உனக்கு ஒரு குறையுண்டு"-என்று கூறுவான்-நிலவைப்போல களங்கம் காதலியின் முகத்தில் இல்லை என்ற எண்ணத்தை மறைத்துக்கொண்டு "குறையுண்டு" என குறும்பு மொழிந்ததை அவளால் புரிந்து கொள்ள முடியாமல் போயிருக்கும்.

இப்படி ஏதோ ஒருவகையில் அவன் தவறு செய்திருப்பான். எந்தத் தவறை கணவன் செய்திருந்தாலும் அவள் மன்னித்து விடுகிறாளாம்—இல்லை—இல்லை—மறந்து விடுகிறாளாம்—அதுவுமில்லை—அந்த தவறு அவளுக்கு காணப்படாமலே போய் விடுகிறதாம். எப்போது? கணவன் அருகே வந்து விட்டபோது! அதற்கு உதாரணம் தருகிறார் வள்ளுவப் பெருந்தகை.

கண்ணுக்கு மையெழுதுங்கோலை கையிலே வைத்திருக்கும்போது பார்க்க முடிகிறது. அதே கை அந்தக் கோலை கண்ணிடத்திலே கொண்டுபோய் மை யெழுதும் நேரத்தில் கண்களுக்கு அந்த எழுதுகோல் தெரிவதில்லை.

அதேபோல, கணவன் எந்தவகையான தவறு செய் செய்திருந்தாலும்—அவனை தன்னருகே கண்டதும்

அந்த தவறுகள் எல்லாம் கண்ணருகே வந்துவிட்ட மையெழுதும் கோல்போல் மறைந்து விடுகின்றன.

“ வரட்டும் சொல்லுகிறேன்—என்ன பாடுபடுத்து கிறேன் ”

“என்னை அழைக்காமல் விழாவுக்கு இவர்மட்டும் எப்படிப் போகலாமாம்?”

“என் மனம் நோக நடந்தவரை—நான் சும்மா விடப்போவதில்லை !!

இப்படி யெல்லாம் கச்சைகட்டிக் கொண்டு நிற் கிருள். அவன் வந்து விட்டதும் தன் கோபத்தை யெல்லாம் மறந்து — அவன்மீது சுமத்திய குற்றச் சாட்டுக்களை நினைக்கவே முடியாமல்—வேறு ஒரு புது லோகத்துக்குப் போய் விடுகிருள். மையெழுதுகோல் போல கணவன் தவறுகள் மறைந்தே விடுகின்றன— வள்ளுவர் குறள் அதைத்தான் அழகாக விளக்குகிறது.

“ எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற்
கோண்கண்
பழிகாணேன் கண்ட விடத்து ”

# 'பார்க்காமல் பார்க்கும் பார்வை'

வைத்தியர் ஊசி குத்துகிறார். உடலில் வலி ஏற்படுகிறது. ஆனால் அந்த ஊசி வழியே உடலுக்குள் செல்லுகிற மருந்து நோய் தீர்க்கப் பெரிதும் உதவுகிறது. வைத்தியரிடம் வேதனை தரும் ஊசியும் இருக்கிறது. நோய் வேதனையை நீக்கும் மருந்தும் அதனுள் இருக்கிறது.

இங்கே திருவள்ளுவர் ஒரு வைத்தியரை குறள் மூலம் அறிமுகப்படுத்துகிறார் பாருங்கள். அழகி அழகனைப் பார்க்கிறாள். அந்தப் பார்வையை அவன் வர்ணிக்கிறான். இந்த அணங்கு இருபார்வையுடையவள். ஒரு பார்வையால் எனக்கு வேதனை உண்டாக்கினாள். அடுத்த பார்வை அந்த வேதனை தீர்க்கும் மருந்தாகப் பாய்கிறது. வேதனையும் அளித்து அதை விலக்கும் மருந்தும் அளிக்கும் இந்த விசித்திரமான மருத்துவப் பெண்மணியின் பார்வைச் சிறப்பை வள்ளுவர் வாய் மொழியாகவே கேளுங்கள்,

"இருநோக் கிவளுண்கண் ணுள்ள தொரு நோக்கு
நோய் நோக் கொன் றந்நோய் மருந்து"

அப்படி அவள் பார்க்கிறாளே என்பதற்காக பருவ இளைஞன் வாளாயிருந்து விட்டானா? அவனோ ஒரு வம்புக்கார வாலிபன் போலும். காதல் மயக்கத்தில் என்னென்ன சொல்லுகிறான் பாருங்கள்,

"நான் அவளைப் பார்க்கும்போது அவள் என்னைப் பாராமல் நிலத்தை நோக்குகிறாள். நான் அவளைப் பாராதிருக்கும்போது அவள் என்னைப் பார்த்து மகிழ்கிறாள்." என்று கூறுகிறான். இது எவ்வளவு பெரிய பொய் தெரியுமா?

"நான் அவளைப் பாராதிருக்கும்போது அவள் என்னைப் பார்த்து மகிழ்கிறாள்" என்கிறானே—இவன் தான் அவளைப் பார்ப்பதில்லையே; அப்படியிருக்கும் போது அவள் அவனைப் பார்ப்பது மட்டும் இவனுக்கு எப்படித் தெரிந்தது? அதேபோல இவன் அவளைப் பார்க்கும்போது, அவள் நிலத்தை நோக்குகிறாளாமே; அது எப்படி? இவனைப் பார்த்துவிட்டுத்தானே அவள் பார்வையை வேறு பக்கம் திருப்பவேண்டும்.

இந்தப் பார்வைக்குத்தான் பார்க்காமல் பார்க்கும் பார்வை என்று பெயர்போலும். இத்தகைய நிகழ்ச்சியால் வள்ளுவர் எதை விளக்குகிறார் தெரியுமா? காதலன் கூறும் பொய்யை மட்டுமல்ல, அவர்கள் கண்களை வேறு பக்கம் திருப்ப அவர்கள் முயற்சித்தாலும் முடியாமல் ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்கிறார்கள் என்பதைத்தான் சொல்லாமல் சொல்லுகிறார் செந்நாப் போதார்' இதோ அந்தக் குறளோவியம்!

"யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்."

மெல்ல நகும்:—உள்ளுக்குள் மகிழ்ச்சியடைவாள் என்பதாகும்.

# கொடும் புருவம்!

அழகு சுமந்து வரும் பெண்ணை பருவச் சுமையால் கனத்துப் போன இருதயம் படைத்த ஒரு வாலிபன் பார்க்கிறன். பார்த்தவன் தன் பாதையில் போவது தானே நியாயம். அந்த அழகியின் மீது பழி கூறிவிட்டுப் போகாவிட்டால் அவனுக்குத் தூக்கம் வராது போலும். மனித வழக்கமே அப்படித்தான் ஆகிவிட்டது. வானத்தில் தவழும் நிலவைப் பார்த்து, "ஏ, நிலவே—ஏன் என்னை இப்படி தகிக்கிறய் ?" என்று கோபித்துக் கொள்வான், சலசலவெனப்பாயும் நீரோடை நிலங் கிழித்துச் செல்வதை பொருமைக் கண்களோடு மனிதன் பார்த்து வயிற்றெரிச்சல் வெளியிடுவான். நான் வருந்தும்போது நீரோடை இப்படி இசைபாடிச் செல்வதா ? என்று கவ்தா உள்ளத்தோடு வசைமொழி வான். அத்தகைய ஒரு இளைஞனைத்தான் இதோ நம் கண்முன்னே—மன்னிக்கவும்—ஒரு மங்கையின் கண் முன்னே நிற்கவைத்து கதறவைக்கிறர், வள்ளுவப் பெருந்தகையார்.

"கொடுமை பொருந்திய புருவங்கள் கோணுதல் இல்லாமல் தடுக்குமானல், இவளுடைய கண்கள் என்னை நடுங்கவைக்கும் அளவுக்கு என் மீது பாய மாட்டா!

அவளது பார்வையில் பட்டுத்தெறிக்கிறதாம் அவனது பருவ நெஞ்சம். அந்த இன்ப வேதனையில் புலம்புகிறன். "அய்யகோ—அணை சரியாகப் போடப் பட்டு, தடுக்கப்பட்டிருந்தால் விரகதாப வெள்ளம்

என்னை மூழ்கடித்திருக்காதே" என்ற கருத்திலே கூறு கிருன்; அவள் சுந்தர விழிகளை அவள் புருவங்கள் சுவர் போலத் தடுத்திருக்கக் கூடாதா என்று! வள்ளுவர் நடையில் அதைப் படியுங்கள்.

"கோடும் புருவங்கோடா மறைப்பின் னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்."

நடுங்கு அஞர் செய்யல—நடுக்கம் தரும் துன்பத்தை, செய்யமாட்டா என்பது பொருள்.

# கனவினுல் காணுர்!

முல்லை மலர்க் காட்டில் மெல்லியலாள் மெய் தழுவிக்கிடந்த காதலன் பிரிகிருன். வாலிபத்தின் விருந்தை இடையருது சுவைக்கும் வாய்ப்பை இருவருமே இழந்து தவிக்கின்றனர். வாணிபம் குறுக்கிடுகிறது. ஆகவே பிரிகிருர்கள். "தலைவனை அணைத்திருக்கும் போது அவன் சிறிது நகர்ந்தாலே மேனி யெங்கும் பசலை நிறம் படர்ந்து என்னை வாட்டுமே; அப்படிப்பட்ட என்னைவிட்டு அவர் இத்தனை நாள் பிரிந்து செல்வது நியாயமா?" என்ற கேள்விக் கணைகளைத் தொடுக்கிருள் கண்ணுடிக்கு முன்னே நின்றுகொண்டு! அந்தப் பளிங்கிலே தோன்றும் உருவம் அவளை மேலும் அழவைக்கிறது. ஏனெனில் பசலை படிந்த அவளது உருவமே அது! அதைக் காணுகிருள். கண்ணீர் முத்துக்கள் உருள்கின்றன. இதழிடை முத்துக்கள் எங்கேயோ ஒளிந்து கொள்கின்றன. பிரிவின் சோகத்தால் காதலன் மீது ஏற்பட்ட கோபத்தோடு படுக்கையிலே படுக்கிருள். இல்லை; விழுகிருள். உடலைப் 'பொத்'தென்று போடுகிருள். தூக்கம் அவளைத் தொட முடியாமல் தவிக்கிறது. இறுதியில் வெல்கிறது. தூங்குகிருள்.

காதலன் வருகிருன். அவனது கற்பகம் சேர்ந்த மார்பில் அற்புத அழகு முகத்தை ஒட்டுகிருள். உச்சி முதல் உள்ளங்கால் வரை முத்த மழையால் நனைகிறது! நேரம் போவதே தெரியவில்லை. தொடர்ச்சி கெடாமல் இன்பம்! கேளிக்கை! கீதம் திடீரென்று விழிக்கிருள்; அவளோடு சேர்ந்து கதிரவனும் விழிக்கிருன்; எல்லாம்

கனவு! கலக்கத்தோடு வாயிற் புறத்தே வந்து நிற்கிறாள்.

அவளைக் கண்ட ஊர் மக்கள், "அய்யோ பாவம்—காதலன் பிரிந்து விட்டான். அதனால் கலங்கி நிற்கிறாள் இந்தப் பாவை!" என்று பேசிக்கொண்டு போகிறார்கள்.

காதலன்மீது ஊரார் பழி கூறுவதாக அவள் கருதுகிறாள். அவன்மீது பழி கூற தன்னைத் தவிர வேறு யாருக்கும் உரிமையில்லை என்பது அவள் எண்ணம். பிரிந்துபோன காதலனைப் பற்றி பழி கூறும் ஊராரைப் பழிக்கிறாள். எப்படி?

"என்னைவிட்டு என் காதலர் நீங்கியிருப்பதாக அவரைக் குற்றம் சாட்டுகிறார்களே இந்த ஊரார்—இவர்கள், பிரிந்து சென்ற காதலனை கனவில் காண்பது கிடையாதோ? என்று வியப்படைவது போல கேலி பேசுகிறாள்.

இதோ குறள்:—

"நனவினால் நம்நீத்தார் என்பர்; கனவினால்
காணார்கொல் இவ் வூரவர்?"

# விழி வீட்டில் எழிலரசி!

"காணிற்குவளை கவிழ்ந்து நிலன் நோக்கும்
மாணிழைகண் ஒவ்வேம் என்று."

குவளை மலர்களுக்கு மட்டும் கண்கள் இருக்குமே யானால் அந்தக் கோமளவல்லியின் கண்களைக் கண்டு "அய்யோ! நாம், அவள் விழிகளைப்போல அவ்வளவு அழகாக இல்லையே" என்று தலை கவிழ்ந்து பூமியை நோக்குமாம்; அத்தகைய விழியழகி அவள்.

மென்மை நிறைந்த அனிச்ச மலர்களைக் காம்பு களையாமல் சூடிக்கொண்டாளாம். அந்தக் காம்பின் கனம் தாங்காமல் அவளது இடை நொந்து வருந்திய தாம்.

வானத்து வெள்ளி மீன்கள், திங்களையும் அந்த வடிவழகியின் வதனத்தையும் கண்டு, எது திங்கள்? எது அவள்?—எனக் கலங்கித் திரிந்தனவாம்! அன்னப் பறவையின் இறகு அவளது பாதங்களில் படும்போது நெருஞ்சிப் பழம் தைப்பது போலிருக்குமாம்— அத்தகைய பட்டு ரோஜாப் பாதங்கள் அவளுக்கு!

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்"

அழகின் இலக்கணமாகத் திகழும் அவளை தன் கண்களிலேயே குடிவைக்க விரும்புகிறான் ஒரு குமரன். விழி வீட்டில் இருப்பவரை வெளியேற்றி விட்டல்லவா, எழிலரசிக்கு இடம்தரவேண்டும். ஆகவே "கண்ண கத்"தில் குடக்கூலிக்கு வசிக்கும் ஆளிடம் போய், 'நப

செய்து நீ வீட்டைக் காலி செய்துவிடு" என்று கெஞ்சுகிறான்.

வள்ளுவர் நடையில் அதைக் கேளுங்கள்.

"என் கண்ணின் கருமணியில் உள்ள பாவையே! யான் விரும்புகின்ற இந்த அழகிக்கு என் கண்ணில் இருக்க இடமில்லை—ஆகவே நீ வெளியேறிவிடு!"

பார்வை தரும் பாவையைப் போகச் சொல்லிவிட்டு முத்துக்கோர்வை தரும் பாவைக்கு கண்ணில் இடமளிக்க விரும்புகிறான். அதற்குக் குறள்:

"கருமணியிற் பாவாய்! நீ போதாய்; யாம்வீழும்
திருநுதற்கு இல்லை இடம்."

காதலியைத் தன் கண்ணில் குடியேற்ற முடியாமல் தவிக்கும் அந்தக் காதலனைக் கேலிபுரியும் வகையிலே காதலி பேசுகிறாள்.

"என் காதலர் என் கண்ணுக்குள்ளேயிருந்து போகவேமாட்டார். கண்ணை மூடித்திறந்து இமைத்துக் கொண்டேயிருந்தாலும், அவர் வருந்தமாட்டார். ஏனெனில் அவர் அவ்வளவு நுட்பமானவர்." இந்தச் சேதியின் மூலம், காதலனைத் தன் கண்ணில் குடியேற்றி விட்ட ரகசியத்தை அவள் கூறுகிறாள். அவனோ தலை குனிகிறான். இதற்குக் குறளோவியம்:

"கண்ணுள்ளின் போகார் இமைப்பின் பருவரார்
நுண்ணியர் எம் காதலவர்."

# யாழெங்கே? குழலெங்கே?

"என் வாழ்க்கைத் துணைவி வார்த்தெடுத்த தங்கப் பதுமை. இல்லறத்து முல்லைக்கொடி. தாமரை மலர் மீது இரு வண்டு அமர்ந்தாற்போல் அவள் விழிகள். கோர்த்து வைத்த முத்துமாலை அவள் சிரிப்பு. இத்தனை உயர்வுடையாள் யாழெடுத்து மீட்டிவிட்டால் இத்தரை மீதினிலே யாருமில்லை என்பேன்.

தெங்கின் இளம்பாளை சுவைத்துவரும் தென்றல், உடலில் மோதும். அதை அந்த யாழ் வெல்லும்—என் துணைவி மீட்டுகின்ற யாழ் வெல்ல, இவ்வுலகில் யாருண்டு? எங்குமில்லை!"

"குயிலோசை கேட்டதுண்டு. கோதை நான் மீட்டுகின்ற யாழோசை எனக்கே தெவிட்டியதுண்டு, என் கொழுநன் வழங்குகின்ற அந்தக் குழலோசை சேர்த்த இன்பம் பேரின்பம் என்பேன்! கூதிர்காலம் கொட்டுகின்ற பனிக்காற்றில் குளிரில்லை, என் கோமான் ஊதுகின்ற குழலோசை குளிர் வெள்ளம்!

சத்துள்ள முத்தமிடக் குவிகின்ற இதழ் பொருத்திக் குழலூதும் அவரை வெல்ல, கத்துகடல் சூழ்கின்ற இப் புவியில் யாருமில்லை—எங்குமில்லை!"

யாழ்மீட்டும் துணைவி—குழலூதும் துணைவன்—ஒருவரையொருவர் புகழ்ந்தனர். வாழ்த்தினர். குழலையும் யாழையும் வெல்ல குவலயத்தில் எதுவுமில்லை யென்ற நினைப்போடு இருவரும் தழுவினர். பின் தம்மை மறந்தனர்.

குழல் இனிதா? யாழ் இனிதா? இரண்டையும்விட இனியது ஒன்றிருக்கிறது எனக் கண்டனர். அப்போதே அல்ல; ஓரிரு ஆண்டுகள் ஓடியபின்!

இருமலர்—ஒரு மொட்டு என்று ஆகிவிட்டது குடும்பம்—

அன்புச் சின்னம்—அழகின் பெட்டகம்—அழித் தெழுதாச் சித்திரம்—அவர்கள் வீட்டில் நடமாடு கிறது—

தன் சிறு கையால் கூழை அளாவி அமிழ்தினும் இனிதாக்குகிறது. தன் மெய் தீண்டிய பெற்ரோர்க்கு உடற்கின்பம் அளிக்கிறது.

இதோ உங்களிருவரின் குழலையும் யாழையும் வெல்லுகின்ற மழலைமொழி என அறைகூவல் விடுக் கிறது.

முற்ருத இதழ்களிலே யிருந்து முதிராத சொற்கள் உதிரும்போது யாழெங்கே—குழலெங்கே—அனைத்தும் இந்த மழலைக்குப் பிறகுதான் என்று முடிவு கட்டுகின் றனர், துணைவனும் துணைவியும்!

இந்த இன்பத்தைத்தான் வள்ளுவர் இரு வரிகளில் எழுதிக் காட்டுகிருர்.

"குழல்இனிது யாழ்இனிது என்பர்தம் மக்கள்
மழலைச் சொல் கேளா தவர்."

# காதற் பாயிரம்!

ஏடெடுத்துக் கவி வரையத் தொடங்குகிறான். எழுத்திலெல்லாம் அவள் உருவம்! உயர் தமிழன் வீரங் கூற ஓலைமீது ஆணி ஓட்டுகின்றான்......அந்த ஆணிப் பொன்மேனியாள், நாணிக்கோணி நடமாடுகின்றாள் சுவடி மீது!

"வேல் வீசும் வீரனே!" என்றெழுதக் கோலெடுத்து "வேல்விழியே தமிழ் விருந்தே" என முடித்தான். பின் திகைத்தான். ஓலைதனை வீசிவிட்டு ஓவியம் வரைவோமென ஓர் யானைமீது சிங்கமொன்று பாய்தல்போல எழுதுதற்கு எண்ணமிட்டு, வண்ணங் குழைத்து—இறுதியிலே யானையின் மறைவினிதே இரு மான்கள் கூடி நிற்கும் சித்திரத்தைச் செய்துவைத்தான். அந்த நினைவிழந்த விசித்திரத்தை அவன் கண்டு "அவளைக் கண்டாலே குழப்பம் நீங்கும்" எனத் திடங்கொண்டு புறப்பட்டான்.

## அங்கு அவள் நிலையோ...

அவனைக் காண்பதற்கு ஏங்கி ஏங்கி பூத்துவிட்ட கண்ணோடு புலம்புகின்ற நெஞ்சோடு புறப்பட்டு வருகின்றாள், பூக்காட்டில் நுழைகின்ற தென்றல்போல!

"எதிர்வருவான்—வந்தவுடன் அத்தான் என அணைக்க வேண்டும். ஈருடல், ஓருயிர் என்ற மொழியைப் பொய்யாக்கி ஓருயிரும், ஓருடலும் நாங்கள் என்பதை அந்த நாகணவாய்ப் புள்ளுக்கும் காட்ட வேண்டும். பாட்டாக்கி வைத்திருக்கும் காதல் நினைவு

களைக் காட்டாற்று வெள்ளம்போல், கவிஞனின் உள்ளம் போல் மடைதிறந்து விடவேண்டும்.

பாடும் குயிலும், ஆடும் மயிலும் பாடங்கேட்க என்னிடந்தான் வரவேண்டுமென என்னவர் கூற அதோ மதுமாந்தித் தேனிதழில் தோய்ந்து கிடக்கும் வண்டினங்களுக்கு நீவிர்தான் வாத்தியாரோ என நான் கேலி பேச......வேலியற்ற தோட்டத்து விளைச்சலை ஆடு மாடு மேய்தல்போல தடையில்லா காதற் களத்தினிலே "போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்" தென்னும் பழமொழியை எட்டித் தள்ளி இன்பப்பண் இசைப்போம்; இருவரும் ஒருவராய்!"

என எண்ணி நண்ணினாள் அவனிடம்—இருவரும் பார்த்தனர், ஊமைகளாயினர், ஓராயிரங்கதை பேச வேண்டுமென வந்தாள்—காதற்பாயிரமாம் கடைக்கண் மட்டும் தந்தாள். நாணம் தலையைச் சாய்த்தது. பேச நினைத்தவைகளை — செயலாற்றக் கருதியவைகளை — எல்லாவற்றையும் மறந்துபோனாள்.

கண்ணே என்பது—கட்டித் தழுவுவது—இவைகளல்ல காதல்—அதோ அந்த ஊமை உணர்ச்சி அவள் விழியின் மூலம் வெளிப்படுகின்றதே அதுதான் காதல்!

அவன் அவளைக் கேலி செய்கிறான்.

"நீ என்னிடம் சொல்வதற்கு வெட்கப்பட்டு மறைத்தாலும் நிற்காது உன்னையும் மீறி உனது விழிகள் எனக்குச் சொல்லக்கூடிய செய்தி ஒன்று இருக்கிறது!"

இந்தக் குறும்பு வள்ளுவர் தரும் கரும்பு! இதோ குறள் :

"கரப்பினும் கையிகந்து ஒல்லாநின் உண்கண்
உரைக்க லுறுவது ஒன்று உண்டு."

# பெண் கொடி !

பெண்களைக் கொடியெனக் கூறினர்—ஏன்? துவண்டிடும் மேனியர் என்பதாலா? வளைந்து நடம் புரியும் மெல்லியலார் என்பதாலா? இல்லை-இல்லை! கொடி ஒரு மரத்தைத் தழுவிக் கிடப்பதுபோல பெண்ணுக்கும், தான் படர்ந்து கிடக்க ஒரு துணை தேவை கொடி படர்ந்த மரத்திற்கே தனி எழில்தான்! கொடி படராத மரங்கள் நிர்வாண மனிதர்களைப் போல!

கோட்டையின் உச்சியிலே கொடி பறந்தால்தான கோட்டைக்குப் பெருமை! கொடிக்கும், கோட்டையின் உச்சியிலே பறக்கும்போதுதான் அதிக மதிப்பு!

ஆணின் இருதயக் கோட்டையிலே ஒரு பெண் கொடி பட்டொளி வீசிப் பறந்துகொண்டேயிருக்க வேண்டும்!

வள்ளுவனார், மாந்தர்க்கு இல்லறத்தை வலியுறுத்தியதின் வாயிலாகவும்—காமத்துப்பாலை வழங்கியதின் வாயிலாகவும்—இந்த உண்மையைத் தெளிவாகவும், தெளிதேனினும் சுவையாகவும் விளக்கியிருக்கிறார். அப்பப்பா! அவர் படைத்துள்ள காதற் குறள்கள் எத்தனை எத்தனை வகை! அத்தனையும் தமிழ்ப் பண்புக்கு ஏற்ற வகையில் அளிக்கும், உவகை!

ஊடலுக்குப் பின் கூடலே தனிச் சிறப்புடைத்து என்பது குறளாரின் எண்ணம். அனுபவமுள்ளோருக்குத் தெரிந்த உண்மையுங்கூட!

அத்தகைய இரு இளம் புருக்களை, இதோ சந்திக்க விடுகிறார் பாருங்கள்!'

கொடி மலர் சூடினால்தான் கோதை கோபிப்பாளோ, என எண்ணி, அவன் கிளைகளில் மலர்ந்த பூக்களைச் சூடிக்கொண்டு வருகிறான். அப்போதும், அவள், அவனைப் பார்த்து, 'நீர் யாரோ ஒருத்திக்கு உமது அழகைக் காட்டுவதற்காக இதைச் சூடினீர்' என்று சினம் கொள்ளுகிறாள்.

"கோட்டுப் பூச்சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று"

கொஞ்சித் தாவி அணைத்திடும்போது தன் கோமளவல்லியின் முகத்தை அவன் சரியாகப் பார்த்திட இயலாது ஏனெனில் இருவர் முகமும் ஒட்டிக் கிடக்கும் வேளை அது! நான்கு கண்களுமே பார்வையற்றுப் போகும் நேரம்; அதனால் அவன் கண்டதில்லை: "அக்கால" முகத்தை! இப்போதோ, அவள் விலகி நின்று பேசுகிறாள். அதனால் அவன் அவள் முகத்தைக் கூர்ந்து கவனிக்கிறான். கோபத்திலுங்கூட அவள் முகம் புது எழில் கொட்டுகிறது. சினத்தால் துடிக்கும் செவ்விதழ்களிலே, அவளையுமறியாமல் புன்னகை, மின்னலிடுகிறது! அந்தப் பொலிவை ரசிக்கிறான் — புது இன்பம் காணுகிறான் காளை! கண் வழியே கள் பருகுகிறான்—வைத்த கண்ணைப் பெயர்த்தெடுக்க முடியாமல் தவிக்கிறான் - அவளோ ஊடலின் உச்சிக்குப் பயணம் போகிறாள்.

"என்னையே இப்படி உற்றுப் பார்க்கிறீர்களே; காரணம் என்ன? யாருடைய அழகோடு என்னை ஒப்பிட்டுப் பார்க்கி

றீர்கள்?" என்று கோபிக்கிறாள். என்னதான் செய்வான்; 'பாவம்' அவன்! பார்த்தாலும் குற்றம் பார்க்காவிட்டாலும்; "அவ்வளவு வெறுப்பா?" என்ற குற்றப்பத்திரிகை வாசிக்கப்படும்! இந்த நிலையில் உள்ள ஒரு காதலனைப் பற்றிய குறள் இது:—

"நினைத்து இருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யார் உள்ளி நோக்கினீர் என்று."

## ஊடல் கனி!

மலையென மோதிய மாற்றாரின் படையைத் தூள் தூளாக்கிவிட்டுத் திரும்பும் மாவீரன், மழுங்கிப் போயிருக்கும் தன் வேலின் கூர்மையைக் காணுகிற நேரத்தில் இப்படித்தான் நம் வருகையை நோக்கி நோக்கிக் காதலியின் வேல் விழிகளும் மங்கியிருக்கும் என்று கவலை கொள்கிறான். மன்னன், தனக்கென ஏற்பாடு செய்த பரிசளிப்பு விழாவிலேகூட மனமின்றிக் கலந்துகொள்கிறான். பாவை தரும் பரிசுகளைப் பெற்றுக் கொள்ளக் காத்திருக்கும் தன் கன்னத்தைத் தன்னை யறியாமல் தடவிப் பார்த்துக்கொள்கிறான். ஓடி வருகிறான் வீடு நோக்கி, அவன் எதிரே வந்ததும்—வந்து, 'வஞ்சி!' என அழைத்ததும்கூட அவனுக்குத் தெரியவில்லை—அப்படி மெய்மறந்து வழிமேல் விழிவைத்துக் கிடக்கிறாள், வரக்காணேனே கண்ணாளனை' என்ற சோக கீதத்தின் அலைகளை எழுப்பியபடி!

'த்சு' என்ற ஒலிக்குப் பிறகே திடுக்கிடுகிறாள், கன்னத்தை ஈரமாக்கியவன் தன் எண்ணத்தில் நிறைந்துவிட்ட மன்னவன்தான் என உணறுகிறாள்—பிறகு பேச்சில்லை!

அன்றிரவு பவனிவரும் நிலவுக்கு இருவருமே வாழ்த்துப் பாடுகிறார்கள் பள்ளியறையிலே துள்ளி விளையாடுகிறார்கள். ஒருவரையொருவர் இழுத்தும்-போர்த்தும்—இதழோடு இதழ் சேர்த்தும் இன்ப விருந்து அருந்துகிறார்கள். இன்ப விருந்து இன்னும் சுவையாக இருப்பதற்கு ஒரு அருமையான கனியையும அளிக்கிறார் திருவள்ளுவர், காமத்துப்பால் வாயிலாக!

அந்தக் கனி—முக்கனியினும் சுவையானது! முத்தக் கனிக்கு மூத்த முழுமுதல் கனி அது! சித்தங் களிப் பேற்றும் சிற்றின்பக் கனிக்கு அடிப்படை அமைக்கும் அன்புக் கனியாகும் அது!

இந்தக் கனியின் பெயர்தான் "ஊடல் கனி"-இன்ப போதையூட்டும் இந்தக் கனியை உண்ட பிறகே இளங் காதலர்க்கு ஆனந்த மயக்கம் ஏற்படுகிறதாம். 'இதை உண்ணுது தேடும் இன்பம், உருசி உடையதே எனினும் 'முழுமை' அடைந்ததல்ல என்பது வள்ளுவர் கண்ட உண்மை—வாழ்வில் துணைபெற்ருேர் வழங்கும் அனுபவ ஏடு!

கட்டிலறையிலே—கணவனும் மனைவியும் செல்ல மாக சண்டை போட்டுக்கொள்ளுங்கள்-ஏன் சண்டை போட்டுக்கொள்ள வேண்டும் தெரியுமா?—ஒன்று சேறு வதற்காக! ஊடல் புரிக! ஏன்? கூடுவதற்காக!-கிண் டல் நிறைந்த அழகான உண்மையல்லவா இது! செல்லச் சண்டை பிறகு இருவரும் தனித்தனியே!—ஓரிரு நாழி கைகள் நகருகின்றன. அதுவரைகூட பொறுக்காது அதற் குள்ளாகவே மங்கிய ஒளியில் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தல்—இருவரும் ஏககாலத்தில் பார்த்துக்கொண்டு ஒருவருக்கொருவர் நாணுதல்—நெருங்குதல்—கரம் படு தல்—'சூ என்னைத் தொட வேண்டாம்' என்ற கடுமொழி ஆனல் கரும்பை வெல்லும் மொழி! அவன் கையை எடுத்துக் கொள்ளல்—பிறகு அவள் அவன்மீது கை படுமாறு நெருங்கல்—'அட நீ ஏன் என்னைத் தொடுகி ருய்?' அவன் சீறுதல் செல்லமாக!

"நீங்கள் மட்டும் ஏன் தொட்டீர்களாம்?"—உரிமைக் குரல் இப்படி!—'நீயும் தொடு; நானுந் தொடுகிறேன்' ஒருவருக்கொருவர் போட்டாபோட்டி!—பிறகு...ஊடல் கனிதந்த உற்சாக வெள்ளம்!—இந்த ஊடல் எவ்வளவு அவசியமானது என்பதைத்தான் வள்ளுவர் அழகாக எழுதிக் காட்டுகிறார்—இதோ குறள்,—

"ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கு இன்பம்
கூடி முயங்கப் பெறின்"

# சித்திரக் கோடுகள்!

சேரன் வில்லோ புருவம்? வீரன் கணையோ விழிகள்? சிந்தைக்கு விருந்தோ இந்தக் காந்தச் சிலை?—என்றெண்ணத் தோன்றும் இந்த எழுதாத சித்திரப் பெண்—ஏழடுக்கு மாளிகையில் எழில் காட்டும் கண்ணாடியின் எதிரேயும் இல்லை; இயற்கையின் அழகு மலிந்த அந்தி நேரத் தோட்டத்து நடுவிலேயும் இல்லை; அடுக்களையிலே அமர்ந்திருக்கிறாள். ஏன்? கேள்வி குடையத்தான் செய்யும்.

அந்தப் பட்டு நிகர் பாவை தன் காதலனுக்குப் பிட்டு தயாரிக்கிறாள். உப்பிட்டு வளர்த்த பெற்றோர், அவளை மலருக்கு ஒப்பிட்டு அவனிடம் தந்தார்கள். அவனோ கொப்பிட்டு வளரும் பகை சாய்க்கக் கொடுவாள் ஏந்திச் சென்றான். அவள் கும்பிட்டுக் கேட்டும் அவன் இருந்தானில்லை. நகர்ந்து ஒழிந்தன நாட்கள். அவளோ நெஞ்ச ஏடுகளைத் திருப்புகிறாள். நெடுஞ் சுவற்றிலேயுள்ள கோடுகளை எண்ணுகிறாள், பால் கணக்கு, தயிர்க் கணக்கு காட்டும் கோடல்ல அவை. அவளின் பற்றுக் கோடு, அவளை விட்டுப் பிரிந்திருக்கும் நாட்களின் கணக்கு! கோடுகளைப் பார்த்துப் பெருமூச்செறிகிறாள். இன்றுதான் வருவானோ-இன்பம் தருவானோ இல்லையோ-இன்றிரவும் தொல்லையோ—என ஏங்குகிறாள். தாமரை மொட்டு நிகர் தனம் படைத்த பேரழகி, தான் சுட்டு தரும் பிட்டுண்ண பேரழகன் வரக்காணேனே எனத் துடிக்கிறாள். அதுமட்டுமா? அத்தான் தன்னைப் பிரிந்து எத்தனை நாட்களாயின என அறிவிக்கும் அந்தச் சித்திரக் கோடுகளைத் தொட்டுத் தொட்டு, எண்ணி எண்ணி

அவள் விரல்களும் தேய்ந்துவிட்டதாகக் கூறுகிறார்; குறும்புக்கார வள்ளுவர்—அதற்கு இதோ குறள்:—

" வாளற்றுப் புற்கென்ற கண்ணுமவர் சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல் "

வழி பார்த்துப் பார்த்து கண்களும் மங்கின—நாட்கோடுகளை எண்ணி விரல்களும் தேய்ந்துவிட்டன என்பது பொருள்.

# நீங்கினுல் நெருப்பு !

காலை அரும்பியதும் பூந்தாது உண்டு, மடல் விரிந்த தாழையினுள்ளே மாலைத் துயில்கொண்டு, மெய்யின்பம் நுகரும் கருவண்டு—

அதுபோல,

காதலனேடு; பூம்பொழிலாம் மதிமுக மங்கையின் பேருருவம் கண்டு; குழலும், யாழும், அமிழ்தும் குழைத்த அவளது மழலைக் கிளவி கேட்டு; தொட்டு; மூவா மருந்தாம் அந்த தேவாமிருத இதழ்களைக் கௌவி உண்டு; அகிலின் புகைக்கு நறுமணம் சேர்க்கும் 'கருப்பு நீர் வீழ்ச்சி'யாம் அவளது கூந்தலை முகர்ந்து; ஐம்புலனையும் அனுபவிக்கிருன்; இன்பத்துப் பாலுக்கு புதியதொரு இலக்கியம் சமைக்கிருன்! கண் நிறைந்த காரிகையின் கூட்டுறவால் மண் திணிந்த ஞாலத்தில் பிறந்ததின் பயனையே அறுவடை செய்கிருன்!

அய்யகோ! அந்தப் பேரின்பத் திருவூற்றின் கண்களை 'பிரிவு' என்னும் பொடி மணல் சரிந்து தூர்க்கிறது. நிலம் விழ்ந்ததொரு மீனுய்—கலம் பறிகொடுத்ததொரு வணிகனுல், காதலன் ஓலமிடுகிருன்! கோதையைப் பிரிந்த காலமெல்லாம் அவனுக்கு ஒரே வாதைதான் !

ஓசை சிறிதுமின்றி ஊர்ந்து செல்லுமே நச்சரவு; அதைப்போல இரவு நடந்த இன்பக் காட்சிகள் அவன் நினைவிலே ஊர்கின்றன. நஞ்சிலும் அதிகமாய்க் கொடுமை செய்கிறதே இந்த நங்கையின் நினைவு—என்று சஞ்சலப்படுகிருன்.

"வேங்கையைத் தழுவுவேன்; இனிமேல் என் விழி நிறைந்தவளைத் தழுவேன்"—என்று சொல்லத் தோன் றும் அளவுக்கு அவனது விரகதாபம் மேலிட்டெழு கிறது.

தங்கச் சிலையின் அங்க அசைவுகள் ஒவ்வொன்றும் மின்னல் கொடிபோல தோன்றி மறைந்து மீண்டும் இன் னல் தருகிறது.

என்னதான் செய்வான் அவன். ஆசைவல்லியைக் கண்டமாத்திரத்தில் அகண்டு மலர்ந்த விழிகளும் அவ ளைத் தவிற வேறெதையும் பாரேன்; என்று தொட்டாற் சுருங்கியைப்போல ஒடுங்கிவிட்டதே!—ஏது செய்வ தென்பதறியாது நிலைதடுமாறுகிறான்; ஏதேதோசொல்லி உள்ளம் புகுத்தவளை திட்டித் தீர்க்கிறான்!

"இன்ப உலகிற்கு வழிகேட்டுவந்த என்னை வாரி அணைத்தாய்; பின் பிரிந்தாய்; இப்போது திசைதவறித் தடுமாறுகிறேனே—" என்று வசை பாடுகிறான்.

"குடுமி கோதி, முத்தம் ஈந்தாய்; இதழ் பிரிந்த என் இதழ்கள் இப்போது கருகி விட்டனவே!"—என்றும் புலம்புகிறான்.

கோமகளின் குளிர்ப்பிடியிலே அடைபட்டுக் கிடந்த அவனது மலைநிகர்த்த மேனி எரிதழல்போல் தகிக்கிறது. "நெருங்கியபோது குளிராய், பின் நீங்கியபோது பெரும் நெருப்பாய் விளங்கும் இதுபோன்ற புதுமையை நீ எங் கிருந்து பெற்றாய்?" என வியக்கிறான்.

அந்த வியப்பை—விரகவேகத்தை இதோ வள்ளுவர் விளக்குகிறார்; பாருங்கள்.

" நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்
தீ யாண்டுப் பெற்றாள் இவள் ?"

அவன்தான் இப்படி! அவள்மட்டும் என்ன: பிரிவினால் இன்பமா துய்க்கிறாள் ? இல்லை; இல்லை.

நெருப்பு தன்னைத் தொட்டால்தான் சுடும்; காதல் நோய்போல் அது தன்னை விட்டு நீங்கியபோது சுடவல்லதாகுமோ ?—என்று சொல்லி கடிந்து கொள்கிறாள்.

" தொடிற்சுடின் அல்லது காமநோய்போல
விடிற் சுடல் ஆற்றுமோ தீ !

# பெய்யெனப் பெய்யும்!

" தெய்வந் தொழா அள் கொழுநற்றொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை "

இந்தக் குறளுக்கு உரை யெழுதிய பலரும் தவருன உரையே எழுதியிருக்கிருர்கள்.

" தன் கணவனுக்கு மேலான தெய்வம் ஒன்றில்லை என்ற எண்ணமுடன் கணவனைத் தொழுது வணங்குகிறவள் பெய்யென்று கூறினல் மழை பெய்யும்."

இத்தகைய உரைகளும், இதனிலும் பிற்போக்கான கருத்தை விளக்கும் உரைகளும் இந்தக் குறளுக்குத் தரப்பட்டிருக்கின்றன. கவிஞன் பாரதிதாசன் அவர்கள் இந்தக் குறளுக்குத் தந்துள்ள உரைதான் பொருத்தமுடையது என அறிவுலகம் ஏற்க முடியும்.

"பெய்யெனப் பெய்யும் மழை" என்பதற்கு பெய்ய வேண்டுமென்று சொன்ன மாத்திரத்தில் பெய்ய கூடிய மழை என்றுதான் பொருள் கூறிடமுடியும். கணவனே தன் தெய்வமெனக் கொண்டவள் மழையைப் போன்றவள். யாருக்கு ? அவளது கணவனுக்கு அவள் மழை போன்றவள். அதுவும் எத்தகைய மழை? பெய்ய வேண்டுமென்று கூறிய மாத்திரத்தில் பெய்யக் கூடிய மழையைப் போன்றவள்.

கழனி, காய்ந்து கிடக்கிறது—கதிர், நீர்தேடி வாடுகிறது-அந்த நேரத்தில் உழவன் வான்நோக்கி நிற்கிருன்-மழை பொழியவில்லை—உழவன் வாடுகிருன்—வேதனை கீதம் பாடுகிருன்—

" கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை."

எல்லாம் வல்லதல்லவா மழை. அத்தகைய மழை யின்றி மனிதன் வாழ முடியுமா? உலகத்தை உய்விக்கும் மழையை மகளிரோடு ஒப்பிடும் அழகே அழகு! அந்த அழகை—வள்ளுவர் தந்த உயர்ந்த ஸ்தானத்தை-உரை எழுதியோர் கெடுத்தனர்.

கழனிக்கு மழை தேவை என்று உழவன் நினைத்த போது உடனே மழை பொழிந்துவிட்டால்—அந்த மழை எத்தனை குடும்பங்களின் நல்வாழ்த்தைப் பெறுகிறது—பெய்யெனப் பெய்யும் மழை பெறுகிற புகழ்மாலைகள் எண்ணிலடங்கா!

அதுபோன்றவளாம், கணவனையே தெய்வமாகக் கருதும் பெண்—அந்தக் கருத்தைத்தான் வள்ளுவர் வண்ணத் தமிழிலே குழைத்துத் தருகிறார்—மீண்டும் ஒருமுறை படியுங்கள்.

" தெய்வந் தொழா அள்கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை "

# பொருட்பால் எனும் பொழில்!

திருக்குறளாம் தேனமிழ்தம் வழங்கிய திருவள்ளுவர் ஒரு நாள் காட்டகத்துக் காட்சிகளை சுவைத்து வரப் புறப்பட்டார்.

தென்னவரின் தோள் போன்ற குன்றுகளும், தமிழ் மன்னவரின் குடைபோன்ற பெருந் தருக்களும் வளங் காட்டி வள்ளுவரை ஈர்த்தன. மான் கூட்டம்—புலி நடமாட்டம் அத்தனையும் கண்டார்.

தொலைவினிலே....குன்றிரண்டு உயிர்பெற்றெழுந்து நின்று உயிர் குடிக்கப் போராடும் நிகழ்ச்சிதனை உண்டார் விழியினாலே!

இரு—யானை இறப்புலகின் அழைப்புக்கு யார் பொருத்தம் என்பதற்குப் போட்டி வைத்துப் போராடும் தீ நிலையைத் தென் தலைவர் வியந்து நோக்கும் வேளையிலே—திருக்குறள் தனிலே புதுக்குறள் இணைக்க பொன்னான வாய்ப் பொன்றை ஓர் மனிதன் தந்திட்டான்.

யானைப் போரை—குன்றின் மீது இருந்தொருவன் கண்டதை இவர் கண்டார், அண்மையில் நெருங்க வொண்ணாப் பெரும்போர்! அதைக் குன்றின் மீது இருந்து காண்பவன் அதிர்ச்சி அடையவில்லை. காரணம் யானைகளுக்கு எட்டாத உச்சியிலே இருக்கிறான். அதனால் அச்சம் எழ நியாயமில்லை! குன்றின்மீது நின்ற வள்ளுவர் அழைத்து வந்தார்—எங்கே? குறள் கோட்டைக்குள்ளே! பொருட்பால் எனும் பொழிலுக்குள்ளே!

குன்றின் மீது நின்று பயங்கரமான யானைச் சண்டையை காண்பவனுக்கு அச்சம் பிறப்பதில்லை. பொருளீட்டும் செயலில் ஈடுபட்டவனுக்கும் அச்சம், வருத்தம் எதுவும் ஏற்படுவதில்லை. குன்றேறி யானைப் போர் காண்பவனும் பொருளுடையவனும் ஒரே நிலையில் உள்ளவர்கள்.

வள்ளுவர் காட்டிலிருந்து திரும்பினர், ஏட்டிலே குறளோவியம் தீட்டினர்.

இதோ அது :—

" குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்
தொன்றுண்டாகச் செய்வான் வினை "

(கைத்து உண்டாக—பொருள் உடையவனாக)

# தக்கார்—தகவிலர்

ஒரு மனிதன் இயற்கையெய்தி விடுகிறான். மறைந்த அந்த மனிதனைப்பற்றி ஊரார் பேசிக்கொள்கிறார்கள். இறந்தவன் நல்லவனா கெட்டவனா என்று பிரச்சினை எழுகிறது. ஒருவன் இறந்தவனைப் பற்றித் தீர்ப்புகூற புதிய வழி கண்டுபிடிக்கிறான்.

"ஏன் இப்படி கஷ்டப் படுகிறீர்கள்? மறைந்தவன் எத்தகையோன் என்பதை அறிய அவனது மகனைப் பார்த்தால் தெரிகிறது—திருவள்ளுவரே கூறியிருக்கிறாரே; நடுநிலை உடையவரா நடுநிலை இல்லாதவரா என்பது அவர்களின் மக்களால் காணப்படும் என்று!"

இதுபோல அவன் விளக்க முறைத்து அதற்காக குறியையும் கூறுகிறான்.

> "தக்கார் தகவிலர் என்பதவரவர்
> எச்சத்தாற் காணப்படும்"

இதுதான் அவன் ஆதாரங் காட்டிடும் குறள். எச்சமென்றால் மக்கள் எனப் பொருள் கொண்டு, மக்களைப் பார்த்து, பணைப் புரிந்துகொள் என்று உரை கூறியவர்கள் தவறான பாதையில் நடந்துவிட்ட காரணத்தால் மேற்கண்ட தீர்ப்பை வழங்க அவன் முன் வந்திருக்கிறான். அந்த உரையின்படி உலகத்தை நோக்கினால் குறளே பொய்த்துவிடும் போல் தோன்றுகிறது.

காந்தியாரின் பெருமையை அவரது எச்சமான அப்துல்லா காந்தியைப் பார்த்து தெரிந்து கொண்டால் என்ன ஆவது? புராணக்கதை எழுதி யிருக்கிறார்களே;

அதிலே வரும் பிரகலாதனின் பண்பைப் பார்த்து, அவனது தந்தை இரணியனின் பண்பைக் கணக்கிட இயலுமா என்ன?

இதுபோன்ற வேறுபாடுகளை உன்னிப்பார்க்குமிடத்து, "எச்சம்" என்னும் சொல்லுக்கு சரியான பொருள் கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

எச்சமென்றால்—எஞ்சி நிற்பது—என்றுதானே பொருள். ஒரு மனிதன் இறந்தபிறகு எஞ்சி நிற்பது அவன் மக்கள்தான் என்பது எப்படிப் பொருந்தும்? அவனுக்குக் குழந்தைகளே பிறக்காமல் போயிருந்தால் அவன் தகவிலர் பட்டியலிலே சேர்க்கப்பட வேண்டியவன் தானா? திருமணம் செய்து கொள்ளாத எத்தனை பெரியவர்களும் தலைவர்களும் எச்சம் வைக்காத காரணத்தால், தக்கார்—தகவிலர்-என்ற தராசுக்கே வராமல் போய்விடுவார்களா? ஆகவே-எச்சம் என்பது மக்களைக் குறிப்பிடும் சொல் அல்ல என்பது உறுதியாகிறது.

எச்சம்—எஞ்சி நிற்பது!—ஒரு மனிதன் இறந்தபிறகு, எஞ்சி நிற்கிற புகழோ—அல்லது பழிச்சொல்லோதான் அவனைப் பற்றிய நல்ல தீர்பைக் கூறவல்லது!

காந்தியை உத்தமர் என்று கூறுகிறோம்—தக்கார் வரிசையிலே நிற்கிறார்-காரணம் எஞ்சியிருக்கும் அவரது புகழ்தான்!

அவரைக் கொன்றவன் தகவிலர் பட்டியலில் முதலிடம் பெறுகிறான்—காரணம் அவனுக்குப் பின் எஞ்சியிருப்பது பழிச்சொல்! குறளைப் படிக்கிறோம்—வள்ளுவன் வாழ்க—என்று கூவுகிறோம்—வள்ளுவனின் எச்சம் திருக்குறள்! மனு நீதியைப் படிக்கிறோம்—ஒரு

குலத்துக்கொரு நீதி என பழிச்சொல் கூறுகிறோம்—இது அவனுக்குப்பின் எஞ்சியதாகும்.—

இப்போது குறளின் உண்மைப் பொருள் நமக்குப் புரிகிறது—தக்கரா—தகவிலரா என்பது அவருக்குப் பின் எஞ்சியுள்ள புகழாலோ—அல்லது பழியாலோ நிர்ணயிக்கப்படும்.

"தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப்படும்."

# மழித்தலும் நீட்டலும்?

திருவள்ளுவப் பெருந்தகையாரின் திருவுருவத்தை நாம் கண்டதில்லை. தமிழகம், தனது சரித்திரத்தையும் தன் புகழ்பாடிய பெரும் புலவர்கள் பற்றிய விவரங்களையும் தன்னகத்தே கொண்டிராத பெருங்குறையால் ஏற்பட்ட விளைவுகளில் ஒன்றுதான், திருவள்ளுவரின் உருவம் நமக்குக் கிடைக்காது போனதாகும். அவர் யாத்தளித்த திருக்குறள் நூல்தான் அவரது திருவுருவமெனக் கொள்ளவேண்டும் என்பர் பெரியோர்.

இந்நாள் போன்று அந்நாளில் விஞ்ஞானப் பெருக்கு மிகுந்திருக்குமேயாயின் ரஷ்ய மண்டலத்திலே லெனின் உடலைக் காத்திடும் செஞ்சதுக்கமொன்று நமது வள்ளுவனுக்காக அமைக்கப்பட்டிருக்கும். அது நிற்க, இற்றை நாளில் இதுதான் வள்ளுவரின் உருவமென பரிமேலழகரின் பரம்பரையினர் எழுதிக் காட்டும் படங்கள் அனைத்தும் ஏற்றுக் கொள்ளக்கூடியன அல்ல என்பதை அறிதல் வேண்டும். பூணூல் என எண்ணிடும் வகையிலே மார்பிலே குறுக்கு அணி பூட்டிக் காட்டுகிறார்கள். தவ சிரேட்டரின் கோலத்திலே உட்கார வைத்து இவரே வள்ளுவர் எனப் பறை அடிக்கிறார்கள். சடா முடிகள் சகிதம் வள்ளுவப் பெருந்தகையாரை வரைந்து காட்டுகிறார்கள்.

வள்ளுவர் சடாமுடிகள் வைத்திருக்கவில்லையென்பதை வள்ளுவர் எழுதிய குறள் பாட்டே தெரிவிக்கிறது.

துறவற இயலிலே துறவின் தன்மை பற்றி அறம் போதிக்கும் அறிஞர் பெருந்தகை மொட்டை அடித்துக் கொள்ளுதல், சடை வளர்த்துக் கொள்ளுதல் ஆகிய கோலங்கள் தீய ஒழுக்கத்தை விட்டவர்களுக்கு தேவை யில்லை என்று வலியுறுத்தி யிருக்கிறார்.

" மழித்தலும் நீட்ட லும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின் "

என்பது குறள். தலையை மொட்டையடித்துக் கொள் வதும், நீட்டி சடை வளர்ப்பதும், உலகத்தினால் தீயை என்று கருதப்படும் காரியங்களை ஒழித்தவர்களுக்குத் தேவையில்லை என்பதே இதன் பொருளாகும்.

தூய்மையான துறவிகளுக்கே சடை வளர்ப்பது போன்ற வேடங்கள் தேவையில்லையென்று கூறும்போது நல்லறமெனும் இல்லறத்திலே ஒழுக்கம் தவறாது ஈடு பட்ட உயர்தனிச் செம்மலாம் வள்ளுவர், சடைமுடிகள் வளர்த்துக் கொண்டிருந்தார் என்று சித்திரம் வரைந்துக் காட்டுவது எங்ஙனம் பொருந்தும்? என்னே ஏமாற்று வித்தை! என்னே மோசடியான செய்கை! வள்ளுவர் இவர்தான் என்று காட்டுகிற ஓவியங்கள், வள்ளுவரின் குறளையே எதிர்த்திடும் வகையில் அல்லவா அமைந்திருக் கின்றன.—

இதற்கோர் நல்ல திருத்தங்காண நல்லறிவாளர்—
—தமிழ்ப்பாவாணர்—உடனே முன் வருவார்களா!

# வேழம் தரும் விளக்கம்

யானை ஒன்று தண்ணீர் குடிப்பதற்காக ஆற்றிலே இறங்குகிறது. அப்போது அந்த யானையை முதலை யொன்று பிடித்துக் கொள்கிறது. யானை உயிர் தப்ப முடியாமல் தவிக்கிறது. அலறுகிறது கடைசியாக அந்த யானை, நாராயணா! நாராயணா!! என்று கத்துகிறது. உடனே மகாவிஷ்ணுவான நாராயணன் தோன்றி அந்த யானையை முதலையிடமிருந்து விடுவிக்கிறான். இதைத் தான் புராணீகர் "கஜேந்திர மோட்சம்" என்று கதைப் பார்கள்.

மலைபோன்ற யானையும் நீரில் கால்வைத்துவிட்டால் முதலையிடம் சிக்கிவிட வேண்டியிருக்கிறது என்பதை விளக்கவும், அதுபோலவே தரையிலே பலமில்லாத முதலை, தண்ணீரில் இருந்தால் யானையை இழுக்கக்கூடிய பலம் பெறுவதாகவும் சொல்லப்படுவதை எடுத்துக் காட்டவும் நிகழ்ச்சிச் சித்திரம் தீட்டிய புராணீகக் கற்பனையாளன், இறுதியில் அந்த யானையை அபயக் குரல் எழுப்பவைத்து, அனந்தசயனனையும் அங்கே வர வழைத்து—கஜேந்திர மோட்சம் என்ற கதைக்கு முற்றுப்புள்ளி வைக்கிறான்.

தண்ணீரில் இறங்கி, முதலைவாயில் காலை கொடுத்து, பரந்தாமனை அழைத்துப் பரகதி அடைந்த யானை, புராணீகனுடைய யானை!

இதோ, இன்னொரு யானையை நமது வள்ளுவப் பெருந்தகையார் அறிமுகப் படுத்துகிறார். பாருங்கள். வேல்கொண்டு வீரன் வருகிறான். அந்த வீரனை யானை

எதிர்க்கிறது. வீரனும், யானையை வெல்லத் தீரமாகப் போரிடுகிருன். தமிழனல்லவா? முதுகு காட்டாத மரபு அல்லவா?

நிமிர்ந்த நெஞ்சோடும், தூக்கிய வேலோடும் அவன் யானைமீது பாயும்போது, யானையும் தந்திரமாக தன் தந்தங்களை நீட்டி, அந்த வீரனின் வயிற்றைக் குத்தி அவனை மேலே தூக்கி விடுகிறது. மரண முகப்பிலே அந்த வேலேந்தி வேதனைக் குரல் எழுப்புகிருன். அதுவும் வீரத்தோடு கறந்து வரும் குரல்தான். வீரனைக் குத்திய வேகத்திலே, அந்த வேழம் வெற்றி நடை போட்டு, ஆவேசமாகவும் ஆத்திரமாகவும்—அங்கு மிங்கும் ஓடுகிறது. அப்படி ஓடும்போது, ஒரு பாறைக்குப் பக்கத்திலே தேங்கி நிற்கும் சேறு நிரம்பிய குட்டையிலே காலை வைத்து விடுகிறது. காலை எடுக்க முடியவில்லை. கனமான மிருகம் யானை. அதன் கனம் பூமியை நோக்கி இறங்குகிறதே தவிர மேலெழுந்து கரையேற யானைக்கு உதவி செய்யும் அளவினதாய் இல்லை. யானை தவிக்கிறது அப்போது ஒரு வேடிக்கை நடக்கிறது—என்ன அந்த வேடிக்கை? ஒருநரி, யானையின் நிலைமையைப் பார்த்து விடுகிறது. இதுதான் சமயமென்று, அந்த நரி, யானையின் மீது பாய்ந்து தன் ஆகாரத்திற்கு வழி தேடுகிறது. யானையின் உடலெங்கும் நரி, தன் பற்களாலும்—நகங்களாலும் பிராண்டி, ரத்தம் குடிக்கிறது. மாமிசமும் தின்கிறது. யானையோ, எதிர்த்திடமுடியாமல் ஏங்குகிறது—வேதனை தாங்காமல் துடிக்கிறது. சேற்றிலே மட்டும் அது அகப்படவில்லையானுல் அந்த நரி, ஒரே மிதியில் கூழாகிவிடும். இப்போதோ, நரிக்கு ஒரே

வேட்டை! நாள் முழுதும் காட்டைச் சுற்றினாலும் இது போல உணவு அதற்குக் கிடைக்காது.

வீரனையே சுழற்றும் பலமுள்ள யானை சேற்றிலே சிக்கினால் நரியிடமும் தோல்வியுறும் என்ற கருத்தை வள்ளுவர் அழகான ஓவியமாகத் தீட்டிக் காட்டியுள்ளார் குறள் மூலமாக! புராணீகன் கஜேந்திர மோட்சமென்ற நம்பமுடியாத கற்பனையை யானையின் மூலம்சொன்னான். ஆனால் வள்ளுவரோ, யானையின் வாயிலாக—ஒரு அரசுக்கு வேண்டிய அறிவுரையையே தீட்டிக்காட்டியிருக்கிறார்.

எத்துணை படைபலம் இருந்தாலும்—ஒரு சிறு பலவீனத்தின் காரணமாக, அந்த அரசு, பலமற்ற எதிரிகளால் பறிக்கப்படலாம் என்பதற்காகவே வள்ளுவர்—யானையின் வலிமையையும், அது சேற்றிலே செல்லாக் காசாகிவிட்ட சேதியையும்—சிறுநரி ஜெயித்த விந்தையையும், குறளோவியம் தீட்டிக்காட்டியிருக்கிறார்.

உலகிலே போற்றப்படும் பெரும் பெரும் மேதைகளும்—வீரர்களுங்கூட, சிறுதவறுகளாலேயே, சிறியவர்களால் வீழ்த்தப் பட்டிருக்கிறார்கள்.

மராட்டியம் தந்த மாவீரன் சிவாஜி, இந்துமதச் சேற்றிலே கால்வைத்ததால் அல்லவா, காகப்பட்டர் என்னும் ஆரியத்தலைவனுக்கு மண்டியிட்டான்! உலக சரித்திரத்தின் ஜோதிவிளக்குகளான சீசரும், ஆன்டனியும் தங்கள் சமுதாயத்தைக் கட்டிக்காகக்க முடியாமல் மண்ணாகப் போனதற்குக் காரணம், அழகி கிளியோபாட்ரா தந்த இன்பச் சேற்றிலே அகப்பட்டுக் கொண்டதினாலன்றோ!

அவ்வளவு தூரம் போவானேன்—இதோ, நமது இன்பத் திராவிடம் வடநாட்டுச் சேற்றிலே கால்வைத்து விட்டதால்தானே—ஆரியக் குள்ளநரிகளுக்குப் பெரும் வேட்டை கிடைத்திருக்கிறது.

இந்தச் சேற்றிலேயிருந்து நமது தாயகம் தனது காலை எடுத்துத்தீர வேண்டும் என்பதற்காகத்தான் போலும்; அன்றைக்கே வள்ளுவர், யானையின் மூலம் எச்சரிக்கை செய்திருக்கிறார்.

நமக்கு மட்டுமல்ல—நாடாளும் அரசுகள் அனைத்துக்கும் நமது தமிழ்த் தலைவர் தந்த குறளறம்—இதோ தரப்படுகிறது! வேல் கொண்ட வீரனைக் குத்திக் கொன்ற யானை, சேற்றிலே் சிக்கினும்—அதை நரிகூட எதிர்த்து அழித்துவிடும்.

"காலாழ் களரின் நரி அடும் கண்அஞ்சா
வேலாள் முகத்த களிறு.

# களச் சாவு

சேனை தழையாக்கிச் செங்குருதி நீர்தேக்கி ஆனை மிதிக்கும் அருஞ்சேரும் போர்க்களத்தில் எதிரிகளின் முடி நடுவதற்கு முரசம் ஆர்த்துவிட்டது. அழைப்பு வந்துவிட்டது அந்த வீரனுக்கு!

படை முழக்கம் பாராய் கண்ணே — தடையின்றி விடை தாராய் பெண்ணே — என வேண்டுகின்றான், விழுப்புண் படாத நாளெல்லாம் வீணான நாட்கள் எனக் கருதும் வீரமகன். விழிப் பண்பாடும் வடிவழகி, முத்து நகை சிந்துகின்ற இதழ் குவித்து முத்தமீந்து, வெற்றியோடு திரும்பிடுக அத்தான் என்று அணைத்து நின்றாள் —அவனுக்குத் தெரியாமல் கண்ணீரை அவன் தோளில் துடைத்துக்கொண்டு!

வேலெடுத்து வா என்பான் — விழி தருவாள் ரத்தம் படிந்த வாள் எங்கே எனக் கேட்பான். செவ்விதழ் கொடுப்பாள். "அக்களமில்லை பெண்ணே இக்களம்! இணைபிரியா எந்தன் துணையே! தலைவனவன் தயாராய் நின்றிருப்பான் எனை நோக்கி! வேல் தருவாய்! விடை தருவாய்! இடையில்லாப் பேரழகே!" என மடை திறந்த காதல் வெள்ளம் விட்டு மறவனவன் நடக்கலுற்றான் மாவீரர் அணிவகுப்பின் பக்கம்!

வழியில் தாய் கண்டாள், வாழ்த்தினாள். வருக புலியே வெற்றியோடு என்றாள். தலைவனவன் உன்மீது சிறு கோபம் கொண்ட சேதி நானறிவேன். நீ மறைத்தால் தெரியாமல் போகுமா தம்பி! தாயகத்தின் மேன்மைக்குத் தலை கொடுக்கச் செல்லுகின்ற படை வரிசை காத்திருக்கும் — கடமை செய்து வா என் கண்ணே என்று முன்பவன் மார்பிலே பெற்றிருந்த புண் மீது முத்தமிட்டாள்.

போருக்குச் சென்ற வீரன் எதிரிகளைப் பொடி செய்து எலும்புப் புழுதியிலே சேர்த்துவிட்டான். இரத்தச் சகதியிலே இரு தரப்பு வீரர்களும் இறுதியாத் திரைக்குச் சித்தமானர். கடைசி வெற்றி பகைவருக்கு என்றோர் சேதி பறந்துவர "கண்ணிருந்து குருடராநாம்?" எனக் கேட்டபடி களத்தினிலே நம் காளை சுழற் காற்ருய்ப் பறந்து சென்றான். தனியொருவன் — தலைவனவன் கண்ணெதிரே பகைப்படையின் பலமழித்தான், தோல்விப் புகைப்படலம் ஒழித்து நின்றான். வெற்றிக்கு வித்திட்டான். அம்மவோ ; இறுதியிலே மறைந்து வந்த அம்புக்கு இரையானன்.

வெற்றி கண்ட படைத் தலைவன், வீரன் சாய்ந்து விட்ட காட்சிகளைக் கண்டு கதறிவிட்டான்.

சிறியோர் சேட்டை விளைத்த சிறுகசப்பால் கருத்திலே வேறுபாடு கொண்டிருந்த காவலனும், களம்பட்டு வீழ்ந்திருந்த காளைதனை கண்ணீரால் குளிப்பாட்டு கின்ருன்.

சாகின்ற வீரன் சொல்வான் :

"தலைவ ! தமைக்காத்த தலைவன் கண்களில் நீர்பெருக் கெடுக்குமாறு ஏற்படுகின்ற இதுபோன்ற களச்சாவுகளை—வீரர்கள் யாசித்தாவது பெறுதல் வேண்டும்."

தலைவன் தன் சாவு கண்டு கண்ணீர் விடுவது வீரனுக்கு அவ்வளவு பெருமையாக இருக்கிறது. தலைவனுக்கு கண்ணீரை வரவழைத்த அந்த வீரச் சாவு பாராட்டுக்குரியது. அதற்கு இதோ குறள் :

"புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து."